அதி பராக்ரமிக3ளு அவர கையலாக3லில்லவு ||462

அந்த4கர குலகெ ஸரி தந்தி3 என்னன்னு
ஹிந்தெ3 கா2ண்ட3வன த3க்3த4 மாட3லில்லவே ||463
தலெய தக்3கி3ஸிகொண்டு3 நுடி3த3 ப்ரதிக்ஞெகெ3
பா3லகர ஸஹலதி3த்3த3ரெ நா ஹோகு3வெ பாவக ||464

ப்ரத்3யும்ன ஸாம்பா3தி3க3ள மத்தெ மிக்க ஹிரியர
ஹோக3பே3டி3ரெந்து3 கிருஷ்ண சஞ்ஞெ மாடி3த3 ||465
விப்ரன மக்களனு ரக்ஷிஸபே3கெந்தெ3னுத
கட்டி தி3க்குக3ளனெ ப்ரஸவகால நோடி3த3 ||466

மந்த்ர விதா4னதி3ந்த3 மந்த்ர ப3ந்த4னவ மாடி3
வஞ்சனெய கண்டு3 பீ4ப4த்ஸு நாசித3 ||467
ஸுடு3 நின்ன ஜன்ம பராக்ரம தோரித்3தி3ல்லவெ
தி4க்கார மாடி3தி3 கமலமுக2த3 ஸ்வாமிய ||468

ஹீனதி3ந்த3 நானாப3கெ3 ஹீன மாதுக3ளனெ கேளி
அபி4மானதி3ந்த3 வன்ஹியொளகெ3 பீ3ளப3ந்த3னு ||469
சென்னிக3 க்ருஷ்ண தன்ன க1ன்னெ மொம்மக3ன ஸூதன
கைஹிடி3து3 கரெது3 ரத2த3 மேலெ ஏரிஸித3னு ||470

ஸப்தத்3ப ஸாக3ர ஹேமது3ர்க3 பர்வத
க்ருஷ்ண ப்ரீதியிந்த3 பார்த்த2கெ3 தோரித3 ||471
ஹரிகு3ருக3ள ஹரிப4க்தர த்4வேஷ த்4வேஷ மாடி3 மாடி3
பாபஸ்த2ளவ பி3ட்டு சக்ர அத்த ஸாரித3 ||472

ஹரிகு3ருக3ள ஹரிப4க்தர த்4வேஷவ மாடி3 மாடி3
வாரிக3 து3க்க2 முளுகி3 கெலவர கண்ட3னு ||473
அஸுரர பா4வர அஸுரபா4வவன்னு பி3டி3ஸி
ரிஷிகுமாரரெந்து3 வாசுதே3வ கரெஸித3 ||474

யக்ஞ ஷாலெகெ3 ப3ந்து3 கு3ருக3ள ப்ரஷ்னெ மாடி3த3
ஸீமெ மீரி ஹோத3னெந்து3 ப்ராயஸ்சித்தவ கொண்ட3னு
||475

வசிஷ்ட க்ருஷ்ணகெ3 அத்4வர்யனாகி3 (நடெ3ஸுதிரலு)
கோடி1 த்3ரவ்யதி3ந்த3 யக்ஞ த3க்ஷிணயெ கொட்டனு ||476

கோ3வுதா3ன ஹிரண்ய(தா3ன) த3ஷதா3ன(வ)
தே3ஷதே3ஷத3 ரிஷிக3ளிகெ3 வாஸுதே3வ கொட்டனு ||477
மூரு ரூப கூடி3 (தோரித3ரு) பூ4மி மேலெ
எந்து3 நாரத3 ஹேளித3னு ஸாது4 ஜனரிகெ3 ||478

யக்ஞவ மாடி3 யக்ஞவரா கரவ முகி3த3ளு
யக்ஞபத்னி கரெஸித3ளு வ்ருத்3த4 ஸதியர ||479
காலு தொளெது3 காஜள ஹச்சி ஸுத்3ரவ்யதி3ந்த3
அலங்கரிஸி
மாணிக்ய ஹாகி மொரத3 பா3கி3ணவ கொட்டளு ||480

மங்க3ளாதே3வி நம்ம மங்க3ளஸூத்ரக்கெ
ப4ங்க3 பே3ட3வெந்து3 தாயிகொ3ந்தி3ஸித3ரு ||481
அங்க3னெர மாது கேளி இந்தி3ராதே3வி தானு
மாதனாட3தெ3 மௌனதி3ந்த3 குளித1ளு ||482

கந்த3ன பராக்ரம கண்டு3 ஏன பே3ட3லெந்து3
மனத3ல்யோசிஸுத்த மக3ன ப3ளிகெ3 ப3ந்த3ளு ||483
விப்ரன மக்களனு தந்து3 நீனு தோரிஸிதி3
என்ன மக்களனெ தந்து3 தோரிஸெந்த3ளு ||484

மக்கள தொடெய மேலெ இட்டு மொலெய கொட்டளு
ஸ்ரீகிருஷ்ணனுச்சிஷ்ட உண்டு3 ஸத்க3திகெ3 ஹோத3ரு ||485
வேத3மூருதி ரத2கெ வேத3த3 குது3ரெ கட்ட
மேக4புஷ்ப ப3லாஹக ஸுக்3ரீவனெனுத கரெத3னு ||486

அங்க3னேர அந்த3ணக்கெ ப4ங்கா3ரத3 மாலிகெ
இந்தி3ரேஷ நடு3வெ நிந்து கரெத3 இந்து3முகி2யர ||487
அல்லல்லி மாதனடு3த எல்லர கரெவுத
முகு3ளு நகெ3 நகு3த கிரீ பெ3வரு பெ3வருத ||488

க3ங்கா3தே3விய ஔளகெ3 பாண்டு3ரங்க3 இளித3
அங்க3னேர ஸீரெக3ள மூடெ1 கட்டித3 ||489
வாரிஜனாப4 பா3யியொளகெ3 நீரு தும்பி3கொண்டு3
அவர மொரெய மேலெ நீர உகு3ளுத்தித்3த3னு ||490

ரங்க3 அங்கை3ய்ய ஔளகெ3 தாம்பூ3லவ தும்பி3கொண்டு3
மங்க3ளாங்கே3ர முக2த3 மேலெ சிம்முத்தித்3த3னு ||491
அம்ப3ரத3 அங்கே3னேரு ஶ்ரீரங்க3ன க்ரீடெ3 கண்டு3
அங்க3தி3ந்த3 இந்த2 க3ண்ட3ன ப3யஸுதித்3த3ரு ||492

ஸுரநாரியரு நரஹரிய க்ரீடெய கண்டு3
ஆதி3 மல்லிகெ3 ஜாஜி குஸுமத3 மளெய கரெத3னு ||493
வாரஸ்த்ரீயரு மாரனய்யன க்ரீடெ3 கண்டு3
மூரு லோக மீரித3ந்தெ தோரி ஜனரிகெ3 ||494

அனந்த மூருதி காந்தேர ஸெரக3 க3ண்டன்ஹாகி
அனந்த மூருதி ஸ்னானவன்னெ மாடுதித்3த3னு ||495
அவப்4ருதவாத3 ஸ்னானவன்னெ க2க3வாஹனனிந்து3 மாடெ3
ம்ருக3வாஹன மந்த3தி3ந்த3 ப3ந்து3 பீ3ஸித3 ||496

தன்ன முக2தி3ந்த3 ஹுட்டித3வர பாத3க்கெரகி3த3
ஸுவர்ண கோ3தான அலங்கரிஸி கொட்டனு ||497
ஹரிவ ஹாவு ஹிடியப3ஹுது உரிவ கிச்சு பிடி3யப3ஹுது3
மரளு அல்ல மாது நிஸ்சய மாடி3கொள்ளிரோ ||498

க்ருஷ்ணவேணியஸ்னான க்ருஷ்ண ப்4ருத்யர ஸங்க3வன்னு
க்ருஷ்ணஷாஸ்த்ர ஸ்ரவண க்ருஷ்ணபாத3 த3ருஷன ||499
இஷ்டு ஈ ஜன்மத3ல்லி கொட்டு ரக்ஷிஸு க்ருஷ்ண
க்ருஷ்ணெ கஷ்ட பி3டி3ஸித3 ஶ்ரீகிருஷ்ண மூருதி ||500

ப3ந்து3க3ள கொந்தா3வ கொந்தே3னெனுதலி
ஸம்ப்4ரமதி3ந்த3 த3ந்தவக்ர த3ண்டெ3த்தி ப3ந்த3னு ||501
நில்லு நில்லு கோ3வள எல்லர கொந்த்3ஹாகெ3 அல்ல
கொள்ளு என்ன அஸ்த்ர நின்ன கொரளிக்3ஹாகுவெ ||502

ஸாக3ரத3 மொரெயுத்த வைரி ஸைன்யத3 மேலெ
ஸிம்ஹனொட1 நோடி3 ஶ்ரீகிருஷ்ண திருகி3த3 ||503
குஸூமனாப4 ஹருஷதி3ந்த3 ஷிரவ தெகெ3யலு அவன
தேஜஸ்ஸு ஹோகி3 வாஸுதே3வனொளகெ3 ஸேரிது ||504

சித்ரசாவடி3கெ3 ப3ரலு முக்தஸூரர கைக3ளிந்த3
எத்திஸுவ யத்ன ப்4ருத்யராடி3கொள்ளிரோ ||505
ப3ந்து3 தே3வகிதே3வி நிந்து3 மக3ன பே3டி3த3ளு
கந்த3 நின்ன பா3லலீலெ நோடு3வெனெந்த3ளு ||506

தொ1ட்ட குப்பஸவ பி3ச்சி டொங்ககெ ஸூத்தித3
க்ருஷ்ணராம தோள தித்3தி3 ஸத்3து3 மாடி3த3 ||507
க3ண்ட3 பீ4ருண்ட3 காருண்ட3 கி3ளி கங்க3ளிந்த3
ரமண பக்ஷியந்தெ குணித3னெ ஜனனி எது3ரிகெ3 ||508

ப3ந்து3 ருக்மிணிதே3வி நிந்து3 நோடி3த3ளு ஆக3
இந்து3 ஈ ரூப எனகெ3 பே3கு எந்து3 பே3டி3கொண்ட3ளு ||509
ஏளுனூர எப்பத்து பா3லலீலெ கதெ2க3ளன்னு
வாதி3ராஜரு மாடி3த3ரு ஒந்த3ர்த்தியிந்த3லி ||510

வாதி3ராஜரு மாடி3த3 பா3லலீலெ ஹேளி கேளித3வரிகெ3
ஸாயுஜ்ய முக்தி கூடு3வ ஹயவத3னனு ||511

****

# அருஞ்சொற்பொருள்

அங்கஜாத - பிரம்மனின் துடையிலிருந்து பிறந்தவர்; நாரதர்
ஆரு = குறும்பு
அட்டுளி = தொந்தரவு
அந்தர = தொந்தரவு
அனிமிஷரு = தேவதைகள்
அனுவர்த்தன = அர்ஜுன
அம்பு = தண்ணீர்
அம்மி = முலை
அருஹ = தகுதி
அனகதுந்துபி = வசுதேவ
ஆவிர்பூத = தோன்றிய
ஆளிகார = வஞ்சகன்
இப்படி = பல மடங்கு
ஈர்பாக = இரு பாகம்
உத்துபேவு ஹாகு = திருஷ்டியைப் போக்கு
உளுபு = உரல்
ஊரு = துடை
ஊருஜாத = பிரம்மனின் துடையிலிருந்து பிறந்தவர்; நாரதர்
கதலாரதி = குங்குமம் + தண்ணீர் கலந்து, திருஷ்டியை பரிகரிப்பதற்காக செய்யும் ஆரதி
கடஹ = கதம்ப மரம்
கண்ணி = கயிறு
க்ரமுக = பாக்கு
குப்பஸ = ரவிக்கை
கள்ளி = நெல்
கஞ்சாக்ஷி = பூதேவி
கஞ்சஸகபுத்ர = ஸூர்ய புத்ர, யம
கும்பினி = பூமி
கெஞ்சக்கி = சிவப்பு அரிசி
கெஞ்செ = அழகான வடிவம் கொண்ட

காருமாடு = தொந்தரவு செய்
குகுரி = பச்சைப்பயிறு ஆகியவற்றால் தயார்செய்த உசிலி
கும்மி = தானியங்களை நிரப்பி வைக்கும் பெரிய பானை
குள்ளொரிகெ = ஒரு வகை இனிப்பு பண்டம்
சட்டு = மண் பானை
சிந்தாகு = கழுத்து ஆபரணம்
சித்ரசாவடி = வைகுண்ட
சூர்ண = மண் ஜாடி
சொச்லு = முதல் குழந்தை
ஜங்கெ = கணகாலு
தனு = அற்புத ஆகாரம்
தாண தீவிகெ = வழிகாட்டும் விளக்கு
திருவி = திரும்ப
த்ரிவண்டி = சன்யாசி வேடத்தில் இருக்கும் அர்ஜுனன்
துடியது = முடியாது
தண்ட தண்ட = விதம்விதமான
தணிய = திருப்தியாகும்
தண்டிஸு = விட்டுவிடு
தாணி = தான்ய
தாரிகெ = அது யாருக்கு?
தாளி ஹரியு = ஆக்ரமணம் செய்யும் திறன்
தட்டி = இடுப்பில் சுற்றுக்கொள்ளும் துணி
தனாதிபதி = குபேரன்
நடு = இடுப்பு
நீர ஹொளெய மட்டி பூஜெ = தண்ணீர்க் கரையில் செய்யும் மெட்டிலு பூஜை
நீரகண்ட = தண்ணீரால் வரக்கூடிய கண்டம்
நெகு = எருது
நெலுவு = பாத்திரங்களை வைப்பதற்கு மேலிருந்து கட்டியிருக்கும் கயிறு
பஞ்சகவ்ய = பால், தயிர், நெய், கோமய & கோமூத்ரம் இந்த ஐந்தின் கலவை

பன்னங்க = பாம்பு
பரியங்க = படுக்கை
பாடிமாடு = கவனம் செலுத்து
பால்புட்டு = கால் விரல் ஆபரணம்
பாவக = அக்னி
பெண்ட்ய = கால் ஆபரணம்
ப்ராதுர்பூத = பிறந்த
புடுவி = கணக ரவை
படிக = தேவஷில்பி, விஷ்வகர்ம
பாவலி = காதின் ஒரு பாகம்
பிரிது ஹோகு = முன்னே செல்
ப்ரமரபக்ஷி = மயில்
மணக = வயதாகும் எருமைக் கன்று
ம்ருத்திகை = மண்
ம்ருகவாஹன = மான் வாகனமாகக் கொண்டவன்; வாயு
மரண பாகிண = முறத பாகிண
மிஸுனி = தங்கம்
முஞ்ச்ய = முன்னே செல்
முஞ்சுடிகெ = உபனயன சம்ஸ்காரத்தின் சந்தர்ப்பத்தின் அணிகலன்கள்
மெட்டிகெ = படிக்கட்டு; மொர = முறம்
யக்ஞகர்மண = கப்பம் ; ராஜதூர்வி = நல்ல வகை அருகம்புல்
வத்ஸபெரு = கன்றுக்குட்டிகளின் கூட்டம்
வரளு = அம்மிக்கல் ; வ்ருத்தி = வேலை
வ்ருந்தா = விறகுக்கட்டை ; விகட = பயங்கர
ஷால்யன்ன = உத்தம அரிசியால் செய்த அன்னம்
ஷிலுக = ஆயுதம் ; ஸ்ரீவத்ஸ = விஷ்ணுவின் இதயப்பகுதி
ஸங்கர்ஷண = பலராம
ஸெளெயபட்டு = இழுக்கப்பட்டு
ஹஞ்சி = ஒரு வகைப் புல்
ஹொந்ததன = சாதுர்யம்

****

# பூர்வ கதைகள் மற்றும் டிப்பணிகள்

(ஸ்லோக எண்ணிக்கை கொடுக்கப்பட்டுள்ளது. மிகவும் கஷ்டமான, விளக்க வேண்டிய ஸ்லோகங்களுக்கு மட்டுமே இங்கு விளக்கம் உள்ளது).

## பூர்வார்த்த

1. இந்த காவியம் த்விபதியில் இயற்றப்பட்டுள்ளது. பொதுவாக த்விபதிகளில் பிரம்ம கணத்தின் லய தென் படுகிறது. இரண்டாம் வரியின் கடைசி பகுதி விஷ்ணுவாக இருப்பதை கவனிக்கலாம். உத்ஸாஹலயத்தால் (3 மாத்திரை) கூடி, போக ஷட்பதியின் ஆக்ருதியை இங்கு பார்க்கலாம். ஆனால், பல த்விபதிகள் சந்தஸ்ஸின் விதிகளை மீறியே இருக்கிறது.

2. தாரதம்ய : மாத்வ மதத்தின் பிரமேயங்களில் முக்கியமானது - தாரதம்ய. லட்சுமிதேவி, ப்ராணதேவர், சரஸ்வதியரிடமிருந்து தொடங்கி, தேவானு தேவதைகளால் மனிதர்கள் வரை, அவரோஹண கிரமத்தில் தாரதம்யம் சொல்லப்பட்டிருக்கிறது. ஒருவருக்கொருவர் வேறுபட்டும், அனாதி கர்மங்களுக்கு கட்டுப்பட்டவரும் ஆன சேதனரில் இந்த ரீதியான தாரதம்யம், மாத்வ மதத்தின் சித்தாந்தத்திற்கு அனுசரித்து சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்தோத்திர, பஜனை, காவ்ய நிர்மாண அனைத்திலும் ஹரிதாசர்கள் இந்த கிரமத்தையே பின்பற்றியிருக்கின்றனர்.

3. நியாயஸுதா : டீகாசார்யரின் நியாயசுதாவிற்கு வியாக்யானம் செய்த ராயராமசந்திரர், யார் என்பதைப் பற்றி ஆராய்ச்சி நடக்கிறது. ராகவேந்திர மடத்தின் மூலபுருஷரான விபுதேந்திரருக்கு தீக்ஷை கொடுத்த உத்தராதி மடத்தின் ராமசந்திர தீர்த்தர், ஸ்ரீரங்கபட்டணத்தின் காசிநாதனுக்கு 24

நாட்கள் ஸுதா பாடம் எடுத்தார் என்று பி.எஸ். கமலாபுர அவர்கள் எழுதியிருப்பதை, டாக்டர். ஹெச்.ஜி. லேகூர அவர்கள் மேற்கோள் காட்டியிருக்கிறார்.

12. கோவு ரூப: துஷ்டர்களின் இம்சையை விஷ்ணுவிற்கு காட்டுவதற்கு சென்று கொண்டிருந்த பூமிதேவி, பசு ரூபத்தை தரித்தாள் என்று பாகவதம் சொல்கிறது.

18. அரசர்கள் தங்களின் பயணத்திற்கு முன்னர், தங்களின் படுக்கைகளை அனுப்பி விடுவர். அதைப்போல, ஸ்ரீமன் நாராயணன் தன் படுக்கையான சேஷதேவரை முதலிலேயே பூலோகத்தில் அவதாரம் செய்யுமாறு கேட்டுக்கொண்டார். (ருக்மிணீஷ விஜயம் 1-26)

22. வசுதேவ பிறந்தபோது, அவனின் வீட்டில் அடுத்து பகவந்தன் அவதரிக்கிறான் என்று அறிந்த தேவதைகள், துந்துபிகளை வாசித்தனர். அதனால் அவனுக்கு அனகதுந்துபி என்று பெயர் வந்தது.

24. கம்ஸ : கம்ஸன், உக்ரசேனனின் மகன். இவன் த்ருமில என்னும் தானவனால் உக்ரசேனனின் மனைவியிடம் பிறந்தவன். உக்ரசேனனின் ராணி தன்னை சேர்ந்தவன், தன் கணவன் இல்லை என்று அறிந்து கோபத்தினால், உன் கெட்ட விதையால் பிறந்தவன், யது வம்சத்தினராலேயே இறப்பான் என்று சாபம் கொடுத்தாள். இந்த சாபத்தின் பலனாகவே இவனின் மரணம் ஸ்ரீகிருஷ்ணனால் ஆனது.

37. காண்டீவ : அர்ஜுனனின் வில். இதனால், அர்ஜுனனுக்கு காண்டீவி என்னும் பெயர் வந்தது.

38. தேவகி தேவி. தேவகனின் மகள். இவள் வசுதேவனின் மனைவி. ஸ்ரீகிருஷ்ணனின் தாய். இவள் முற்பிறவியில் அதிபதியாக இருந்தாள்.

51. ரோஹிணியல்லிட்டிது - ரோஹிணி வசுதேவனின் மனைவி. இவளின் மகன் பலராமன்.

52. சேஷனாக சங்கர்ஷணவெந்தெனிஸி - கத்ரு புத்ரரான நாகரில் ஒருவர். இவரை ஸ்ரீமன் நாராயணன் படுக்கையாக ஆக்கிக் கொண்டார். பலராமன் சேஷனின் அவதாரம். தேவகியின் ஏழாம் கர்ப்பத்தில் சேஷன் அவதரிக்க வேண்டியிருந்தது. மாயைக்கு சொல்லி, இந்த கர்ப்பத்தை தேவகியிடமிருந்து எடுத்து, ரோஹிணியில் வைத்து, இதனால் பலராமன், சங்கர்ஷண (இழுக்கப்பட்டவன்) என்று அழைக்கப்பட்டான்.

57. பூர்வகாலதல்லி காலநேமி : தாரகாசுரனின் மரணத்திற்குப் பிறகு, மூன்று தலைமுறைகள் வரை, காலநேமி தேவதை களை வென்று இந்திரபதவியை அனுபவித்திருந்தான். அடுத்து வைகுண்டத்திற்கு குறிவைத்து, விஷ்ணு மற்றும் கருடனை தன் மஹா கதையினால் அடிப்பதற்கு முயன்றபோது, ஹரி தன் சக்ராயுதத்தினால் அவனை சம்ஹாரம் செய்தான்.

65. சுக்ல ஷோணித சம்பந்த ... தான் அனைத்து மானவ குழந்தையைப் போல பிறக்கவில்லை என்பதை தெரிவிப்பதற்காக கிருஷ்ணன் சங்கு, சக்கர, சதுர்புஜனாக அவதரிக்க வேண்டும் (ருக்மிணீஷ விஜயம் 1-45-55).

72. ஷிஶுபால வைரி நீனெ... யதுவம்சத்தின் அரசர்களில் ஒருவன். இவனின் தாய் கிருஷ்ணனின் அத்தையான ஷ்ருதவ்ரத. சிசுபாலன் குழந்தையாக இருந்தபோது, ஸ்ரீகிருஷ்ணன் தன் அத்தையின் வீட்டிற்குச் சென்று, அக்குழந்தையை எடுத்துக் கொண்டபோது, அவனின் இரு கைகளின் பிய்ந்தன. இதனால் தன் மகனுக்கு கிருஷ்ணனாலேயே சாவு வரலாம் என்று அறிந்து, தன் மகனை பிழைக்க வைக்குமாறு கேட்டுக் கொண்டாள்.

அப்போது கிருஷ்ணன் சிசுபாலனின் நூறு தவறுகளை தான் சகித்துக் கொள்வதாக வாக்களிக்கிறான். அடுத்து பாண்டவர்களின் ராஜசுய யாக சமயத்தில், அக்ரபூஜையின் சம்பந்தமான கிருஷ்ணனை அழைத்தபோது, அப்போது கிருஷ்ணனால் கொல்லப்பட்டான்.

75. கௌஸ்துப ஹார... ஸ்ரீமன் நாராயணன் இதயத்தில் தரித்த ரத்னம். இது பாற்கடலைக் கடையும் சமயத்தில் தோன்றியதாகும்.

81. ஹிந்தினா தபக்கெ மெச்ச பந்தெனெந்தனு... ஸ்வாயம்பு மன்வந்தரத்தில் ப்ருஷ்ணி மற்றும் அவளின் கணவன் சுதப ஆகியோர் 12,000 ஆண்டுகாலம் தவம் செய்தபோது, விஷ்ணு மகிழ்ந்து, மூன்று பிறவிகளில் உன் கர்ப்பத்தில் தான் மகனாகப் பிறப்பதாக வரம் கொடுக்கிறார்.முதலில் ப்ருஷ்ணிகர்ப்ப என்னும் பெயரிலும், அடுத்து அதிதி கஷ்யபரின் மகன் வாமனனாகவும், மூன்றாவதாக தேவகி வசுதேவரிடம் கிருஷ்ண என்னும் பெயரிலும் பிறந்தான்.

88. ப்ருஷ்ணிஜென்மதல்லி... = அதிதி கஷ்யபரிடம் வாமனனாக. கஷ்யப மரீசி முனியின் மகனான இவனுக்கு திதி, அதிதி ஆகிய 13 பேர் மனைவியர். இரு மனைவியரின் பேச்சினைக் கேட்டு, வருணனின் பசுக்களை இவன் திருப்பித் தராததால், வருணனின் சாபத்திற்கு ஆளாகி, வசுதேவ தேவகி மற்றும் ரோஹிணியராக த்வாபர யுகத்தில் பிறந்தான். பசுக்களை பலவந்தப்படுத்தியதால், வசுதேவனுக்கு சிறைவாசம் ஆனது.

97. காளிந்திய தீரதல்லி நந்தகோபன பள்ளி.. காளிய சர்ப்பன் வசித்த யமுனா நதிக்கரை. ரிஷியின் சாபத்தினால், கருடன் இங்கு வராததால், காளிய சர்ப்பம், இந்த காளிந்தி தீரத்தில் வசித்து வந்தது. கோகுலம் - நந்தகோபனின் வசிப்பிடம்.

116. இத்த கோகுலதொளகெ ... மதுரைக்கு சமீபத்தில் இருக்கும் கிராமம் - கோகுலம்.

122. மது எம்ப தைத்யன... மது மற்றும் கைடபர்கள் சகோதரர்கள். விஷ்ணுவின் காதின் அழுக்கிலிருந்து பிறந்தவர்கள். இவரின் தொந்தரவுகளால் நொந்த பிரம்மன், ஹரியின் நாபிகமலத்தில் சென்று சேர்ந்தார். மது கைடபர்களுடன் விஷ்ணு யுத்தம் செய்து, அவர்களை வென்றார்.

126. மத்ஸ்யகெ கூர்மகெ வராஹகெ நரஹரிகெ வாமன பார்க்கவனெ... ஸ்ரீமன் நாராயணனின் தசாவதாரங்களில் முதலாவது மத்ஸ்யாவதாரம். ஸோமக என்னும் அசுரன் வேதங்களை அபகரிக்க, விஷ்ணு மத்ஸ்யாவதாரம் எடுத்து அந்த அசுரனைக் கொன்று வேதங்களை காத்தார். ஸ்ரீமன் நாராயணனின் இரண்டாம் அவதாரம் கூர்மாவதாரம். பாற்கடல் கடையும் சமயத்தில் தேவதைகளின் பிரார்த்தனைக்கேற்ப மந்தர மலை கடலில் மூழ்காதவாறு கூர்மனாக ஸ்ரீஹரி தாங்கிப் பிடித்தார்.

ஸ்ரீமன் நாராயணனின் மூன்றாம் அவதாரம் வராஹ அவதாரம். ஹிரண்யாக்ஷன், ரசாதலத்தில் இருந்துகொண்டு, உலகத்தை காத்து வரும் வராகனே, மஹாவிஷ்ணு என்று அறிந்து, அவனை போருக்கு அழைக்க, வராகன், தனது இடது காலினால் அசுரனின் கதையை துண்டித்து, அவனைக் கொன்றான். ஸ்ரீஹரியின் நான்காம் அவதாரம் நரஹரி. பிரகலாதனின் பிரார்த்தனையைக் கேட்டு, விஷ்ணு கம்பத்திலிருந்து அவதரித்து ஹிரண்யகசிபுவைக் கொன்றான்.

127. ராமகெ க்ருஷ்ணகெ புத்தகெ கல்கிகெ ... - இது விஷ்ணுவின் மற்ற அவதாரங்கள் ஆகும்.

128. ஷம்பராரிபிதனு ... - ஷம்பராசுர மாயாவி தைத்யன். ஸ்ரீகிருஷ்ணனின் மகனான பிரத்யும்னன், இந்த அசுரனைக் கொன்றான்.

142. மூரு தினகள கொல்லு... - குழந்தை பிறந்தவுடன் அதன் தொப்புள் கொடி பிரிக்கப்படுகிறது. அதன் மற்ற பாகம் 5-6 நாட்களில் அதுவாகவே விழுகிறது. அப்படி விழுவதை, அந்த கர்ப்பிணிப் பெண், 10வது நாளில் எடுத்து பூஜிப்பது, வட கர்னாடகத்தில் ஒரு சம்பிரதாயமாக இருக்கிறது. இந்த பூஜைக்கு, நனைத்த கடலை, வெற்றிலை மற்றும் பாக்கினை பயன்படுத்துகின்றனர். அந்த கொடியை, கயிற்றின் உதவியுடன் குழந்தையின் கையில், இடுப்பில் கட்டுகின்றனர். இதுவே இந்த பத்தியில் விளக்கப்பட்டுள்ளது.

149. பூதனிய பரெய களுஹி... - கம்சனின் சேவகியான இவள், கம்சனின் ஆணைப்படி, கோகுலத்தின் சிசுக்களுக்கு பால் கொடுத்தவாறு, நந்தகோபனின் வீட்டை அடைந்து, பாலகன் கிருஷ்ணனுக்கு தன் விஷம் நிறைந்த முலையால் பால் கொடுக்கத் துவங்கியபோது, ஸ்ரீஹரிரூபியான ஸ்ரீகிருஷ்ணன், அவளின் வாழ்க்கையைப் பறித்தான். பூதனி, பயங்கரமான தன் அசுர உருவத்தில் உயிர் விடுகிறாள்.

162. பூதனிய ஸுடுதிரலு .. - ஸ்ரீகிருஷ்ணனுக்கு பால் கொடுத்த புண்ணிய காரியத்தால், அவனின் அங்கசங்கத்தினால், தேகத்தை விட்டபோது, அவளின் தேகத்திலிருந்து ஒரு திவ்யமான ஜாதிப்பூவின் நறுமணம் வெளிவந்தது (பாகவத 10ம் ஸ்கந்தம்). சிம்ஷுபா வ்ருட்சத்தின் நறுமணம் வந்தது என்னும் பாட பேதமும் இருக்கிறது.

167. யஷோதெகெ மொதலெ எரெதரு .. - கோகுலத்தின் தலைவனான நந்தனின் மனைவி. ஸ்ரீகிருஷ்ணனின் வளர்ப்புத் தாய்.

168. யஷோதெ ரோஹிணி பந்து குளிதரு ... - வசுதேவனின் மனைவி. இவளின் மகன் பலராமன்.

170. காக்யக மொதலாத .. - யாதவர்களின் புரோகிதர். இவனின் தந்தை - கால யவனன்.

201. விஷ்வகர்ம .. - அஷ்டவசுக்களில் ஒருவனான ப்ரபாஸ மற்றும் ப்ருஹஸ்பதியின் தங்கையான யோகஸித்தியின் மகன் இவன். மகன் விஷ்ணுரூபாசார்ய. இவன் இந்திரபிரஸ்தத்தை நிர்மாணம் செய்தான். திலோத்தமையை படைத்தான். த்ரிபுராசுரனின் வதைக்காக ஷிவனுக்கு ரதத்தை நிர்மாணம் செய்து கொடுத்தான். கிருஷ்ண ஜன்மோத்ஸவத்தின் சந்தர்ப்பத்தில் அவனுக்காக தொட்டில் செய்து கொடுத்தான்.

210. மந்தரோத்தர ஹரிய ... - தேவதைகள், தைத்யர் ஒன்றாக பாற்கடலைக் கடைந்த சந்தர்ப்பத்தில் மந்தர பர்வதத்தை மத்தாக பயன்படுத்தினர். இது விஷ்ணுவின் தலைமையில் நடந்தது. ஆகையால், அவனுக்கு மந்தரோத்தர ஹரி என்று பெயர் வந்தது.

252. ஹொஸ்திலொளகெ கண்டன்ஹெஸர ஹேளு எந்தரு ... - வட கர்னாடக பகுதிகளில், திருமணம் போன்ற சுப நிகழ்ச்சிகளில் இருக்கும் பழக்க வழக்கங்கள், இந்த காவியத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. திருமண நிகழ்ச்சியில், ஆண், தன் வருங்கால மனைவியின் பெயரை; பெண், தன் வருங்கால கணவனின் பெயரை ஒரு புதிர் போல (விடுகதை) சேர்த்து சொல்வார்கள். இந்த காவியத்தில் ஶ்ரீகிருஷ்ணனின் நாமகரண சந்தர்ப்பத்தில், ஊரின் சுமங்கலிப் பெண்கள் வந்து, பாலகிருஷ்ணனின் தாய் தேவகி மூலமாக விடுகதை மூலம் கூற வைத்தார்களாம்.

263. ஆக கம்ஸ ஷகடன பேகதிந்த.. - கம்சனின் சேகர்களில் ஒருவன். இவன் வண்டி உருவத்தில் கோகுலத்தை

அடைந்து, ஶ்ரீகிருஷ்ணனின் மேல் விழ, ஶ்ரீகிருஷ்ணன் தன் சின்னஞ்சிறு கால்களால் இவனை மிதித்துத் தள்ளி கொன்றான்.

280. பக்ஷிவாஹனனாகி... - கஷ்யப முனி மற்றும் வினதையரின் மகன் கருடன். கருடனின் சாமர்த்தியத்தைக் கண்டு விஷ்ணு அவனுக்கு சுபர்ண என்னும் பெயரைக் கொடுத்து, தன் வாகனமாக ஆக்கிக் கொண்டான்.

282. ஸூரரிகெ ஸுதெய நீடித... - பாற்கடலைக் கடையும் சமயத்தில் வெளிவந்த அமிர்தத்தை பகிர்ந்தளிக்கும் காலத்தில், அசுரர்களை ஏமாற்றி, தேவதைகளுக்கு மட்டுமே அதனை பகிர்ந்தளிப்பதற்காக, விஷ்ணு மோகினியின் ரூபத்தை ஏற்றான்.

285. புத்ரனெந்த யஷோதெ... - தாய் யசோதாதேவி, பாலகிருஷ்ணனை தன் துடையின் மேல் அமர்த்தி கொஞ்ச, திடீரென்று குழந்தையானது, பல மலைகளின் பாரத்தின் அளவிற்கு ஆனதைப் போல ஆகி, யஷோதை அதனை தாங்க முடியாதவள் ஆனாள்.

360. நளகூபர மணிக்ரீவரு.. - நளகூபர், மணிக்ரீவர் இருவரும் குபேரனின் மக்கள். இந்த சகோதரர்கள் பெண்களுடன் கங்கா நதியில் ஜலக்ரீடை ஆடிக்கொண்டிருக்க, நாரத முனிவர் அங்கு வந்தார். அவரைக் கண்ட பெண்கள் வெட்கத்துடன் சேலையை உடுத்த, ஆனால் இவரைக் கவனிக்காமல் நளகூபர் மற்றும் மணிக்ரீவர் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்ட நாரதர், இவர்களை மரங்களாக ஆகுமாறு சாபம் கொடுத்தார். ஶ்ரீகிருஷ்ணனின் பாத ஸ்பர்ஷம் ஆகி, சாப விமோசனம் ஆகும் என்று கூறினார். அடுத்து அவர்கள் இருவரும் நந்தகோபனின் வீட்டில் மரங்களாக வளர்ந்தனர். ஶ்ரீகிருஷ்னனின் தாய் யசோதை, மகனின் குறும்புகளை பொறுக்க முடியாமல், அவனை

உரலில் கட்டி வைத்தாள். ஸ்ரீகிருஷ்ணன் அதனை இழுத்துக் கொண்டு அந்த மரங்களுக்கிடையே போக, அவனின் ஸ்பரிசத்தால் அந்த மரங்கள் இரண்டும் விழுந்து, இந்த இரு யக்ஷர்களும் சாப விமோசனம் பெற்றனர்.

370. பூதனி ஷகட த்ருணாவர்த்த கேஷியன்னெ... - ஷகட கம்ஸனின் சேவகன். வண்டி உருவத்தில் கோகுலத்தை சேர்ந்து, ஸ்ரீகிருஷ்ணனின் மேல் விழ, அவன் தன் சின்னஞ்சிறு கால்களால் அவனை மிதித்துக் கொன்றான்.

த்ருணாவர்த்த - ஸ்ரீகிருஷ்ணனை கொல்வதற்காக கம்சனால் அனுப்பப்பட்டவன் த்ருணாவர்த்தன். யசோதை குழந்தையை படுக்க வைத்து, தன் வீட்டு வேலைகளை செய்து கொண்டிருந்தபோது, அந்த அசுரன், சூறாவளியின் ரூபத்தில் வந்து குழந்தையை தூக்கிக் கொண்டு சென்றான். கடைசியில், ஸ்ரீகிருஷ்னனின் பாரத்தை தாங்கமுடியாமல் குழந்தையை கீழே போட முயன்றபோது, ஸ்ரீகிருஷ்ணன் அசுரனின் கழுத்தை பலமாக பிடித்துக் கொண்டான். இதனால் அசுரனின் உயிர் பிரிந்து அவன் இறந்தான்.

கேஷி.. கம்சனின் சேவகர்களில் ஒருவன். குதிரை உருவத்தில் வந்த இவன் கோகுலத்தை துன்புறுத்த, ஸ்ரீகிருஷ்ணன் இவனைக் கொன்று கேஷவ என்னும் பெயரைப் பெற்றான்.

312. கருவினந்தெ பந்த ஒப்ப கள்ள அசுரனு... - கம்சனின் சேவகரான தேனுகாசுரன், கழுதையின் ரூபத்தில் வந்தான். இவன் ப்ருந்தாவனத்தின் அருகில் தாளவனத்தில் வசித்தான். கோபர்கள், ஸ்ரீகிருஷ்ண, பலராமர்களுடன் தாள மரங்களுக்கிடையே விளையாடுகையில், கழுதையின் ரூபத்தில் வந்து, பலராமனின் மேல் விழுந்தான்.

பலராமன், அவனது பின்னங்கால்களைப் பிடித்து, கரகரவென்று சுற்றி தாள மரத்தில் அடித்து அவனைக் கொன்றான்.

இன்னொரு பாடம் இவ்வாறு இருக்கிறது. கிருஷ்ணனைக் கொல்வதற்காக யமுனா நதிக்கரையில், வனங்களின் நடுவில், கருவின் உருவத்தில் வந்த இவனை கிருஷ்ணன், அவனின் வால் மற்றும் பின்னங்கால்களை ஒன்றாகப் பிடித்து, கரகரவென்று சுற்றி அடித்தான்.

387. பக்ஷிரூபவன்னு தரிஸி.. ஶ்ரீகிருஷ்ணன் பசுக்களை மேய்த்தவாறு, அவற்றை தண்ணீர் குடிக்க வைப்பதற்காக, யமுனா நதிக்கரைக்கு வந்தபோது, அங்கு மிகப்பெரிய ஒரு பறவை தென்பட்டது. இவனே பகாசுரன். இவன் ஶ்ரீகிருஷ்ணனை தன் அலகினால் பிடித்தபோது, அவனுக்கு நெருப்பினை பிடித்ததைப் போல ஆனது. தன்னைக் கொல்ல வந்த, இந்த கம்சனின் சேவகனான பகாசுரனை, ஶ்ரீகிருஷ்ணன், இரண்டாக கிழித்துப் போட்டான்.

486. காளிங்க கமலனாபன.... காளிங்க சர்ப்பம் கோபர்களின் பசுக்களுக்கும், கோபர்களுக்கும் தன் விஷ ஜ்வாலையால் தொந்தரவு கொடுக்க, அவர்களின் பிரார்த்தனைக்கேற்ப, ஶ்ரீகிருஷ்ணன் காளியனை வென்று, பாதாளத்திற்கு அனுப்பினான்.

492. கிச்சின ரூபினிந்த பந்து ஸுத்த... - காளிங்கனை, அவனின் குடும்பத்தினருடன் ரமணக த்வீபத்திற்கு அனுப்பிய கிருஷ்ணன், யமுனா தீரத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது, அங்கு காட்டுத்தீ பரவியது. கோகுலத்தின் மக்கள் அனைவரும் ஶ்ரீகிருஷ்ண, பலராமனை வேண்ட, ஶ்ரீஹரி, அந்த காட்டுத்தீயை குடித்தான்.

586. இந்திரனிந்த நினகெ க்ஷேம... - யமுனா தீரத்தின் பர்வதம் - கோவர்த்தனகிரி. கோபாலகரின் பசுக்களின்

மேய்ச்சலுக்கான மலை. இந்திர யக்ஞத்தை நிறுத்தி, கோவர்த்தன யக்ஞத்தை நடத்திய ஸ்ரீகிருஷ்ணன், இந்த பர்வதத்தையே தூக்கிப் பிடித்து, மழையிலிருந்து அனைவரையும் காத்தான்.

674. காடதெ நம்ம கொடெ கருணிஸி ராஸக்ரீடெ... தன்னில் பக்தி செய்ததைக் கண்டு மகிழ்ந்த பகவந்தன், அவர்களை மகிழ்விப்பதற்காக அந்த கோபியர்களுடன், ராசக்ரீடை ஆட சங்கல்பம் செய்கிறான் (ஸ்ரீஹரிகதாம்ருத சிந்து - ஸ்ரீஅச்யுத தாச). சமதளமான, புல் இல்லாத ஒரு இடத்தில், நடுவில், ஒரு உயரமான கம்பினை நிறுத்தி, அதனைச் சுற்றி அனைவரும் நின்று கொண்டு, கைகளைப் பிடித்தவாறு, தம் சக்திக்கேற்ப சக்கரத்தைப் போல, சுற்றும் விளையாட்டிற்கு ராஸக்ரீடை என்று பெயர்.

712. ஆதன மந்திரிகளு பேக அக்ரூரன கரெஸிதரெ... வ்ருஷ்ணிபுத்திரனான ஷ்வபல்கனின் மகன் அக்ரூரர். இவனின் தாய் காந்தினி, காளி தேசத்தின் அரசனின் மகள். அக்ரூரன் - தானஷீலன் என்று பெயர் பெற்றவன். ஹரிபக்தன். க்ரூரியான கம்சன், வில் பண்டிகை என்னும் பெயரில், பலராம கிருஷ்ணர்களை அழைத்து வந்து அவர்களைக் கொல்ல வேண்டும் என்று நினைத்தான். அதற்காக அக்ரூரரை அனுப்பினான். அப்படியே பலராம ஸ்ரீகிருஷ்ணனை அழைத்துக் கொண்டு வருகையில், யமுனா நதிக்கரையில் ஸ்ரீகிருஷ்ணன் அக்ரூரருக்கு தன் திவ்ய ரூபத்தைக் காட்டினான்.

798. ராமன்ஹோதிவ ஹொதிகெயன்னு ரஜகனானெய மேலெ... கம்ஸனின் சேவகனான துணி துவைப்பவன் ஒருவன், ராஜவீதியில் வந்து கொண்டிருக்கையில், எதிரில் வந்த கிருஷ்ண பலராமர், தமக்கு உடுத்துவதற்கான ஒரு ஆடையைக் கொடு என்று கேட்கிறார்கள். ஆனால் அதற்கு ஒப்புக்கொள்ளாத அவனின் தலையை கிருஷ்ணன்

துண்டாக்கி, அங்கிருந்த ரத்னங்கள் நிறைந்த ஒரு பட்டுத்துணியை எடுத்து தான் அணிந்து, தன் சகோதரனுக்கும் கொடுக்கிறான்.

809. காஜின பட்டலல்லி கந்தவன்னு தெகெதுகொண்டு... கம்சனின் அந்தப்புரத்து தாசி - குப்ஜை. பலராம கிருஷ்ணர்கள், கம்சனின் அழைப்பின் பேரில், வில் பண்டிகைக்காக மதுரா பட்டணத்திற்கு வர, அவர்களின் எதிரில் அவள் கிண்ணத்தில் சந்தனத்தை எடுத்துக் கொண்டு வந்திருந்தாள். பலராம கிருஷ்ணர், அந்த சந்தன கிண்ணத்தை அவளிடமிருந்து பெற்று, அவளின் கூன் முதுகை நிமிர்த்துவதற்காக, அவளின் பாதத்தை மிதித்து நிமிர்த்த, அவளின் தேக பிரச்னைகள் தீர்ந்து அவள் நேராக ஆனாள்.

860. முஷ்டிக சாணூரரெம்ப ஜட்டிகளு.... முஷ்டிக மற்றும் சாணூர - கம்சனின் ஆஸ்தானத்தில் இருந்த ஒரு மல்யுத்த வீரர்கள். வில் பண்டிகைக்காக வந்த ஸ்ரீகிருஷ்ணனால் இவர்கள் கொல்லப்பட்டனர்.

881. கிருஷ்ண உக்ரஸேனராயகெ பட்டவ கட்டித... கம்சனின் தந்தை. இவனை போஜராஜன் என்றும் அழைக்கின்றனர். கம்சனின் மரணத்திற்குப் பிறகு, இவனுக்கு கிருஷ்ணன் பட்டாபிஷேகம் செய்விக்கிறான்.

## உத்தரார்த்த

5. அந்து ஸாந்தீபனல்லி கம்பீரத்வாக்யவ... ஸ்ரீகிருஷ்ண பலராமரின் வித்யா குருகள் - சாந்தீபனி முனிவர். ஒருமுறை இவர் தனது மனைவி, மகனுடன் பிரபாஸ க்ஷேத்திரத்திற்கு சென்றபோது, ப்ரகலாதனின் தம்பியான சஹ்லாதனின் மகனான

பஞ்சஜனன், இவரது மகனை தூக்கிக் கொண்டு கடலுக்குள் சென்றான். ஸ்ரீகிருஷ்ணன் தனது குருவிடம் படிப்பினை முடித்து, இறுதியில் குருதட்சிணை என்ன கொடுப்பது என்று கேட்க, அந்த குருவானவர், இறந்த தன் மகனை பார்க்க வேண்டும் என்று கேட்டார். ஸ்ரீகிருஷ்ணன், பஞ்சஜனன் இருக்கும் இடத்தை சமுத்ர ராஜனிடமிருந்து தெரிந்து கொண்டு, அவனைக் கொன்றான். ஆனால் அங்கு குருபுத்திரனைக் காணாமல், அந்த அசுரனிடமிருந்து பாஞ்சஜன்யத்தை ஸ்ருஷ்டித்து, யமலோகத்திற்குச் சென்று அங்கிருந்த குரு புத்திரனைக் கொண்டு வந்து குருவிடம் ஒப்படைத்து குருதட்சிணை செலுத்தினான்.

17. கிருஷ்ண உத்தவன கரெது... - உத்தவன் - யாதவ வீரர்களில் ஒருவன். ஸ்ரீகிருஷ்ணனின் மந்திரி. வசுதேவனின் தம்பியான தேவபாகனின் மகன். ஸ்ரீகிருஷ்ணனிடமிருந்து ஞானோபதேசத்தைப் பெற்று, அவனின் பக்தன் ஆனவன். கிருஷ்ணன் உத்தவனை அழைத்து, கோகுலத்தில் தன் பெற்றோர், உறவினர் எப்படி இருக்கின்றனர் என்று பார்த்து வருமாறு கேட்டுக் கொள்கிறான்.

32. ப்ராஸ்தேரு பந்து... - ஜராசந்தனின் பெண்களே கம்சனின் மனைவிகள். பலராம கிருஷ்ணர்கள் கம்சனைக் கொன்றதால், விதவைகளான தன் பெண்களைக் கண்டு கோபமடைந்த ஜராசந்தன், யாதவர்களை, மற்றும் அவர்களின் தலைநகரான மதுரையை அழிப்பதற்காக 23 அக்ஷோணி சைன்யத்துடன் போர் புரிய வந்தான்.

35. மதுரெகொந்து காவுத ஹடெதவளு... - ஜராசந்தன், தன்னிடம் இருந்த கதையை மதுரையின் மேல் எறிந்து, அங்கிருந்த மக்களை கொல்வதற்கு நினைத்தான். அதற்காக, நாரதரிடம் யோசனை கேட்டான். 101 யோஜனை என்று நாரதர் கூறியதை, தவறாக 100 என்று கேட்டு, அதன்படி தன்

கதையை தூக்கி எறிந்ததால், அது அவ்வளவே தூரம் சென்று, அவனின் தாய் ஜரை மேல் விழுந்து, அவள் இறந்தாள்.

43. இப்பரொந்தாகி... வ்ருத்தப்ராம்ஹண கண்டு... - கிருஷ்ண பலராமர்கள் சிறிது காலம் மதுரையை விட்டு, பொதுமக்கள் போகமுடியாத கோமந்த கிரிக்கு செல்லும்போது, வழியில் ஒரு முதிய பிராமணரின் ரூபத்தில் வந்த பரசுராமரை பார்க்கின்றனர். இந்த கோமந்த பர்வதத்திற்கு ரைவத என்றும் பெயர் உள்ளது.

44. ஒப்ப எம்போதே ஸித்த... - அத்வைதவாதிகளுக்கு பலராம கிருஷ்ணர் இருவரும் ஒருவரே. புறக்கண்களுக்கு இருவரும் வெவ்வேறாகத் தெரிகின்றனர்.

48. பஞ்சவர்ணத முகுட துஷ்ட அஸுர.. - ஒரு முறை ஸ்ரீகிருஷ்ணனின் தலை மேல் கிரீடம் ஒன்று அழகாக ஒளிர்ந்திருந்தது. கிருஷ்ணன் யோக நித்திரையில் இருந்தபோது, பலி சக்ரவர்த்தி அதனை அபகரித்தான். இதனை அறிந்த கருடன், பலியுடன் போர் புரிந்து, வென்று, அந்த கிரீடத்தை திரும்ப கிருஷ்ணனின் தலை மேல் வந்து வைத்து, அவனே நாராயணன் என்று அறிந்து ஸ்தோத்திரம் செய்தான்.

55. கரவீரபுரகெ பந்து... - ஷ்ருகால வாசுதேவ, கரவீர புரத்தின் அரசன். வசுதேவனுக்கு தைத்ய பெண் ஒருத்தி மூலம் பிறந்தவன். ஷ்ருகால தன் பெயருடன், வாசுதேவ என்னும் சொல்லையும் சேர்த்துக் கொண்டான். தந்தை வசுதேவ, ஷ்ருகாலன் குழந்தையாக இருக்கையிலேயே, மனைவியை அவளின் பிறந்த வீட்டில் விட்டு, மதுரைக்கு திரும்பினான். ஷ்ருகாலன், தன் தாயினை சேர்த்துக் கொள்ளாமல் புறக்கணித்த தந்தை வசுதேவனிடம் மற்றும் யாதவரிடம்

த்வேஷம் கொண்டான். ஸ்ரீபார்க்கவ ராமன், ஸ்ரீகிருஷ்ணனிடம், அவனை கொல்லுமாறு கேட்டுக் கொள்கிறான். ஸ்ரீகிருஷ்ணன், தன் சக்ராயுதத்தினால் அவனைக் கொல்கிறான்.

57. நக்கரு யாதவரு சிக்க புத்தியனெ மாடி... - யாதவர்களின் புரோகிதர் கர்காசார்யர். யாதவர்கள் இவரை பரிகாசம் செய்தனர் என்னும் கோபத்தினால், சிவனின் அருளால் காலயவன என்னும் மகனைப் பெற்றான்.

58. உக்கின புடிய முக்தி... - காலயவனன்; சிவனின் அருளால், ஒரு அப்ஸரஸ் பெண்ணில் கர்க முனிவர் காலயவனனைப் பெற்றார். தம் குலபுரோகிதரான கர்கரை, யாதவர்கள் பரிகாசம் செய்ததால், அவர் கோபம் கொண்டு, யாதவர்களை இம்சிக்கவல்ல ஒரு மகனைப் பெறவேண்டும் என்று சங்கல்பம் செய்தார். ஸ்ரீகிருஷ்ணன் இவனை எதிர்கொள்ள முடியாமல் ஓடி ஒரு குகையில் ஒளிந்து கொண்டான். கிருஷ்ணனை துரத்திக் கொண்டு வந்த காலயவனன், இந்திரனின் குறிப்பினால், அங்கு தூங்கிக் கொண்டிருந்த முசுகுந்தனை கிருஷ்ணன் என்று நினைத்து, அவனை காலால் எட்டி உதைக்க, எழுந்த அவனின் த்ருஷ்டியினாலேயே காலயவனன் எரிந்து சாம்பலானான்.

63. சக்ஷுஸ்ஸு... கிருஷ்ணன கண்டு ராம ஸ்தோத்ர மாடித: முசுகுந்தன், மாந்தாதாவின் மகன். தைத்யரை நாசம் செய்தவாறு தேவதைகளை காப்பாற்றினான். போர் செய்து, அதனால் சோர்வுற்று ஒரு குகையில் படுத்திருந்தான். தூங்கி எழுந்ததும் யார் முதலில் தன் கண்ணில் படுகிறாரோ, அவர்கள் இறப்பார்கள் என்னும் வரம் பெற்றிருந்தான். படுத்திருந்த முசுகுந்தனை எழுப்பியதால், காலயவனன் அழிந்தான். அப்போது அங்கு கிருஷ்ணனைக் கண்டு, முசுகுந்தன் கிருஷ்ணனை வணங்கினான். முசுகுந்தனின்

ஸ்தோத்திரத்தில், ராஜர்கள் பெண்களின் மேல் உள்ள மயக்கத்தால், பவ என்னும் கிணற்றில் வீழ்வார்கள் என்றும், தேகத்தின் மேல் உள்ள ஆசை கொண்ட மனிதன், சஜ்ஜனர்களின் சங்கத்தைப் பெறவேண்டும் என்றும் கூறினான்.

70. ஆனந்த பரிதனாத கங்கெய மொம்மொகனு... - இந்த வரி, திருதராஷ்டிரனைக் குறிக்கிறது.

72. பிரம்மன ஸபெகெ ஹோகி ராய.. எந்து விதியு ஹேளித = ரைவத ராஜன், தன் மகள் ரேவதிக்கு தக்க வரன் யார் என்று கேக, பிரம்மனிடம் சென்றபோது அங்கு கேட்ட கந்தர்வ கானத்தைக் கேட்டு, நான்கு யுகங்கள் கழிந்தன. கடைசியில் பிரம்மன், அவளுக்கு பலராமனே தக்க வரன் என்று கூறினான். ரேவதி பலராமனைவிட உயரமாக இருந்தாள். பலராம தன் ஆயுதத்தால், அவளை தனக்கு ஏற்ற உயரத்திற்கு ஆக்கிக் கொண்டான்.

76. ஆனெ மேலெ பேரி ஹாகி.. பீஷ்மகராய ஸாரித... = சுமார் 100 த்விபதிகளில் கிருஷ்ண ருக்மிணி விவாஹ சந்தர்ப்பம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. விதர்ப்ப தேசத்தின் அரசன், பீஷ்மகனுக்கு ருக்மி, ருக்மரத, ருக்மபாஹு, ருக்மகேஷ, ருக்மமாலிக என்னும் 5 ஆண் மக்களும்; ருக்மிணி என்னும் ஒரு பெண்ணும் இருந்தாள். ருக்மிணியின் அண்ணனான ருக்மி, அவளை சிசுபாலனுக்கு திருமணம் செய்து கொடுப்பதாக தீர்மானித்தான். ருக்மிணி க்ருஷ்ணனிடம் மயங்கி, தன்னை திருமணம் செய்து கொள்ளுமாறு வேண்டி, அவனுக்கு ஒரு கடிதம் எழுதி, ஸ்வயம்வர நாளன்று வருமாறு கூறினாள். அதைப்போலவே, ஸ்வயம்வரத்திற்கு வந்த கிருஷ்ணன், ருக்மிணியை அபகரித்து, த்வாரகைக்கு வந்து, திருமணம் செய்து கொண்டான். ருக்மிணியை விரும்பிய சிசுபாலன்,

கிருஷ்ணனின் யாதவ சைன்யத்துடன் போரிட்டு தோற்றான்.

ருக்மிணியை கிருஷ்ணன் பலாத்காரத்துடன் அழைத்துச் சென்றதை பார்த்த அவளது அண்ணன் ருக்மி, கிருஷ்ணனைக் கொன்று, ருக்மிணியை விடுவிக்காமல் தான் ஊர் திரும்புவதில்லை என்று தன் சைன்யத்துடன் சென்று, கிருஷ்ணனை எதிர்த்தான். கிருஷ்ணன் ருக்மிணியை போரில் தோற்கடித்தான். அவனை அவமானப்படுத்தினான். த்வாரகா நகரில் கிருஷ்ண ருக்மிணியரின் திருமணம் மிகுந்த வைபவத்துடன் நடந்தது. 101. அக்ரூரன காயிதி அஜமிளகெ வரவித்தி... = அஜாமிளன் ஒரு பெண்ணைக் கண்டு மயங்கி, அவளிடம் பல வாரிசுகளைப் பெற்றான். இவன் மரணிக்கும் சமயத்தில் யமதூதர்களைக் கண்டு பயத்துடன் நாராயணன் என்னும் தன் மகனை அழைக்க, அதனாலேயே, வைகுண்ட லோகத்தை அடைந்தான்.

102. அம்பரீஷன பொரெதி கஜேந்த்ரகெ வரவித்தி: த்வாதசி பாரணையன்று வரவேண்டிய துர்வாசர், வராததால் அம்பரீஷன் தீர்த்தத்தை எடுத்துக் கொண்டான். இதனால் கோபம் கொண்ட துர்வாசர், அம்பரீஷனை கொல்வதற்காக ஆயுதம் ஏவ, பக்தவத்ஸலனான பகவந்தன், தன் சக்ராயுதத்தினால் அதனை அழித்து, அம்பரீஷனை காப்பாற்றினான். பாண்டிய தேசத்தின் வைஷ்ணவ ராஜனான இவன், அகஸ்த்யனின் சாபத்தினால் கஜராஜன் ஆனான். இவன் ஒரு குளத்தில் நீர் குடிக்கையில், ஒரு முதலை அவனின் காலைப் பிடித்தது. இவன் ஸ்ரீஹரியிடம் முறையிட, ஸ்ரீஹரி வந்து அவனை காப்பாற்றினான்.

116. கதாக்ரஜன பயஸி.. = கதாக்ரஜன் என்றால் பலராமனின் சகோதரன். சுமேதனின் மனைவியிடம் பிறந்தவன் கத. இவன் அர்ஜுனனைப் போலவே, இரு கைகளால் பாணம் விடக்கூடியவனாக இருந்தான்.

190-204 : ஸிம்ஹ பந்து... = சூரியனைக் குறித்து தவம் செய்து, ஸத்ராஜிதன் ஸ்யமந்தக மணியைப் பெற்றான். ஒரு நாள் ஸத்ராஜிதனின் தம்பியான ப்ரஸேன என்பவன் வேட்டைக்குச் சென்றபோது, அந்த ரத்னத்தை தன் கழுத்தில் போட்டுக் கொண்டு சென்றான். வேட்டையாடிக் கொண்டிருந்தபோது, ஒரு சிங்கம் அவன் மேல் பாய்ந்து அவனைக் கொன்றது. அவனின் கழுத்தில் இருந்த ரத்னத்தை அது தன் வாயில் எடுத்துக்கொண்டு ஒரு குகைக்குள் சென்றது. அந்த குகையில் வசித்த ஒரு கரடி, அந்த சிங்கத்துடன் போரிட்டு, அந்த மணியை தன் குழந்தையிடம் விளையாடக் கொடுத்தது. ஸத்ராஜிதன் தம் தம்பி திரும்ப வராததைக் கண்டு, ஸ்ரீகிருஷ்ணன் மேல் சந்தேகப்பட்டான். தன் மேல் வந்த அபவாதத்தை பரிகரிக்க, ஸ்ரீகிருஷ்ணன் காட்டிற்குச் சென்று, அந்த குகையில் நுழைந்தான். அங்கு அந்த கரடிக் குழந்தையிடம் அந்த மணியைக் கண்டான். கிருஷ்ணன் அந்த கரடியான ஜாம்பவந்தனுடம் போராடி, அவனை வென்றான். ஜாம்பவந்தன், அந்த ரத்னத்தையும், தன் மகளான ஜாம்பவதியையும் ஸ்ரீகிருஷ்ணனை ஏற்றுக்கொள்ளுமாறு கூறினான். அதைப் போலவே, கிருஷ்ணன் அந்த இரண்டையும் ஏற்றுக் கொண்டான்.

206. ரக்ஷெயனிட்ட ஸொக்கித கூளிய கட்டி... = கிருஷ்ணனின் அஷ்ட மஹிஷியரில் ஒருத்தி நீலா. இன்னொரு பெயர் ஸத்யெ. இவளின் தந்தை நகஜித. ஸ்ரீகிருஷ்ணன் இந்த நகஜித ராஜனின் ஏழு எருதுகளை ஒரே காலத்தில் அடக்கியதால், அந்த அரசன் தன் மகளான நீலையை திருமணம் செய்து கொடுத்தான். (இந்த சம்பவம், இதே காவியத்தில் பூர்வார்த்தத்தில் 51ம் ஸ்லோகத்திலும் உள்ளது).

207. பத்ரவந்தி மதுவெயாகி.. = பத்ரா ஸ்ரீகிருஷ்ணனின் மனைவிகளில் ஒருத்தி. இவளின் தாய் ஸ்ருதகீர்த்தி.

208. மித்ரவந்திய மதுவெயாகி... = ஸ்ரீகிருஷ்ணனின் அத்தை ராஜாதிதேவியின் மகள் இவள். ஸ்ரீகிருஷ்ணனின் மனைவிகளில் ஒருத்தி.

209. யமுனியெ தீரதல்லி = காளிந்தி கிருஷ்ணனின் அஷ்டமஹிஷியர்களில் ஒருத்தி. ஸ்ரீகிருஷ்ணனை கணவனாக அடைய வேண்டும் என்று இவள் தவம் செய்தாள். கிருஷ்ணன் இவளை இந்திரப்ரஸ்தத்தின் மூலம் த்வாரகைக்கு கொண்டு வந்து திருமணம் செய்து கொண்டான்.

211. ஹிடிம்பன கொந்த ஹிடிம்பிய மதுவெயாகி.. = ஹிடிம்பனை பீமன் கொன்று, அவனின் தங்கையான ஹிடிம்பியை, வியாசரின் அனுமதியைப் பெற்று திருமணம் செய்தான். இவர்களுக்குப் பிறந்தவனே கடோத்கஜன்.

212. அக்ரூர க்ருதவர்ம ஷததன்வகெ ப்ரேரிஸி... ஸ்ரீகிருஷ்ணனின் ராணி சத்யபாமையை தான் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று ஷததன்வன் விரும்பினான். ஆனால், அவளை ஸ்ரீகிருஷ்ணன் திருமணம் செய்து கொண்டதைக் கண்டு, ஷதத்வன்வன், சத்ராஜிதனின் மேல் கோபம் கொண்டான். அவனுக்கு அக்ருர, க்ருதவர்ம ஆகியோர் உதவி செய்தனர். சத்ராஜிதனின் கழுத்தில் இருக்கும் ஸ்யமந்தக மணியை அபகரிப்பதற்காக, அவன் தூங்கும்போது அவனைக் கொன்றனர்.

215. பஞ்சபாண்டவரு கூடி மார்க்கதொளகெ.. = தேவகந்தர்வர்களில் ஒருவன் சித்ரரதன். திரௌபதி ஸ்வயம்வரத்திற்கு புறப்பட்ட பாண்டவர்களில்

அர்ஜுனனுக்கு தன்னிடம் இருந்த ஸம்மோஹன அஸ்திரத்தை உபதேசம் செய்தான். ராஜசூய யாகத்தில் பாண்டவர்களுக்கு அனேக திவ்ய அஸ்திரங்களைக் கொடுத்தான். அங்கார வர்ம என்னும் இன்னொரு பெயரும் இவனுக்கு உண்டு.

220. த்ரெளம்யாசார்ர கூடிகொண்டு... : தௌம்யாசார்யர் பாண்டவர்களின் புரோகிதர். இவர் பாண்டவர்களுக்கு சூரியனிடமிருந்து அக்ஷய பாத்திரத்தை பெற்றுத் தந்தார். அரண்ய வாசகாலத்தில் பாண்டவர்களுடன் இருந்து, அவர்களுக்கு நல்வழி காட்டிக் கொண்டிருந்தார்.

249. வ்ருஷ்டி ஹோகி துருபிக்ஷ ஹெச்சலு ... : ராஜ்யத்தில் மழை நீங்கி வறட்சி வருவதற்கு என்ன காரணம் என்று ஶ்ரீகிருஷ்ணன் கேட்டான். அதற்கு அக்ரூரர் ஊரில் இல்லாததே காரணம் என்று தெரிய வந்தது. ஸத்யபாமா விவாகத்தின் பின்னணியில் ஷததன்வனுக்கு உதவிய அக்ரூரன், கிருஷ்ணனுக்கு பயந்து த்வாரகையிலிருந்து ஓடிப்போய் தலைமறைவாக இருந்தான்.

260. பலதேவர மகினி தன்ன மடதி ஆகபேகெந்து... வசுதேவனின் மகள் சுபத்ரெயை துர்யோதனனுக்கு கொடுத்து திருமணம் செய்யும் சிந்தனையில் இருந்தபோது, அர்ஜுனன் அவளை அபகரிக்க திட்டம் போட்டான். அதற்காக சன்யாசி வேடம் போட்டு, ப்ரபாஸ க்ஷேத்திரத்திற்கு வந்தான். பூஜை செய்வதற்கு வெளியில் வந்த சுபத்திரையை அர்ஜுனன் தூக்கி ரதத்தில் அமர்த்தி, இந்திரபிரஸ்தத்திற்கு வந்தான். பலராமன் இந்த செய்தியைக் கேட்டு, அந்த சன்யாசியைப் பிடிக்க, தன் மாமனின் சேனையைக் கேட்டான். அர்ஜுனன் அவர்கள் அனைவரையும் தோற்கடித்தான்.

இதனால் மேலும் கோபம் கொண்ட பலராமன், தன் கலப்பை ஆயுதத்தைப் பிடித்து, அர்ஜுனனை கொல்ல புறப்பட்டான். அப்போது ஶ்ரீகிருஷ்ணன், அவனை தடுத்து நிறுத்தி, சுபத்திரையே அர்ஜுனனை விரும்பிப் போயிருப்பதால், இதில் பிரச்னை செய்வது வீண் என்று கூறினான். பலராமன் அதற்கு ஒப்பி, மகிழ்ச்சியுடன் தங்கைக்கு விடை கொடுத்தான்.

265-274... : ஒன்பது நுடிகளில் காண்டவ வன தகனத்தில் கதை இருக்கிறது.

275-373. : பாரிஜாத அபஹரண கதை. ஶ்ரீகிருஷ்ணன், சத்யபாமா மற்றும் ருக்மிணியருடன் இருந்தபோது, நாரதர் அங்கு வந்தார். ஒரு பாரிஜாத பூவைக் கொடுக்க, ஶ்ரீகிருஷ்ணன் அதனை ருக்மிணிக்குக் கொடுத்தான். இதனால் கோபம்கொண்ட சத்யபாமைக்கு ஶ்ரீகிருஷ்ணன், ஸ்வர்க்கதிலிருந்து பாரிஜாத மரத்தையே கொண்டு வந்து கொடுத்தான். அதனை அவள் தன் அரண்மனையில் வைத்தாள். ஆனால், தேவேந்திரன் இதனால் கோபம் கொண்டான். கிருஷ்ணன் சத்யபாமையுடன், நரகாசுரன் இருந்த இடத்திற்குச் சென்று, அவனைக் கொன்று, அதிதியின் குண்டலங்களை பெற்றுக்கொண்டு, இந்திரனிடமிருந்து மரியாதை பெற்றுக் கொண்டான். ஆனால், பாரிஜாத வ்ருக்ஷ சமயத்தில், போருக்கு வந்த இந்திராதி தேவதைகளை வென்று, ஶ்ரீகிருஷ்ணன் அந்த பாரிஜாத மரத்தை திரும்ப இந்திரனுக்கே கொடுத்தான்.

324. ஹம்ஸவாஹனகெ.... ஹம்ஸ டிம்பிகர் இருவரும் சகோதரர்கள். ஹம்ஸ கரூஷ தேசத்து அரசன். இதனை பலராமன் கொன்றான். டிம்பிக ஜராஸந்தனின் மந்திரி. கம்ஸன் ஶ்ரீகிருஷ்ணனுடன் போர் புரிந்து மூர்ச்சை அடைந்தபோது, டிம்பிகன், ஹம்ஸன் இறந்தான் என்றே

நினைத்து, யமுனா நதியில் பாய்ந்து உயிர்த்தியாகம் செய்து கொண்டான்.

326. தந்தெ மாது கேளிதவனு.... : தந்தையின் பேச்சைக் கேட்டவன் என்றால் அது பரசுராமன். அவன் 21 முறை பூபாரத்தை குறைக்கும் செயலாக, ராஜர்களைக் கொன்று, அந்த ரத்தத்தினால் ஐந்து குளங்களை தோற்றுவித்தான். அதுவே ஸ்யமந்த பஞ்சகங்கள். அந்த இடமே குருக்ஷேத்ரம். கிருஷ்ண, பலராமாதிகள், சூரிய கிரகணத்தன்று ஸ்னானத்திற்காக, தானம் கொடுப்பதற்காக அங்கு வந்தனர்.

333-338. கிருஷ்ணனின் அஷ்ட மஹிஷியர்களில் சிலர் தமது திருமண சந்தர்ப்பத்தை விவரிக்கின்றனர்.

339-343. திரௌபதி தான் அர்ஜுனனை திருமணம் செய்து கொண்ட சந்தர்ப்பத்தை விவரிக்கிறாள்.

344. வசுதேவ யக்ஞகர்மவ மாடி த்ரவ்ய பிராமணரிகெ... வசுதேவன் அனைத்து பாவங்களின் பரிகாரத்திற்காக ஒரு சத்கர்மத்தை செய்விக்குமாறு ரிஷிகளைக் கேட்கிறான். அதற்கு ரிஷிகள் (நாரதர்) மனிதன் பிறக்கும்போதே, தேவருண, ரிஷிருண மற்றும் பித்ருருண ஆகியவற்றை பெற்றே வருகிறான். அத்யயனத்தினால் ரிஷிருண தீர்கிறது. புத்ரர்களால் பித்ருருண தீர்கிறது. நீ யக்ஞத்தின் மூலம், தேவ ருணத்தை தீர்க்க வேண்டும் என்கிறார். அதனால், வசுதேவ, அந்த ஸ்யமந்த பஞ்சகத்திலேயே யக்ஞ கார்யங்களை செய்கிறான்.

345-347. வசுதேவன், கிருஷ்ணனை வணங்கி அவனின் குண கானங்களை பாடியதன் விவரம்.

353-367. இந்த நுடிகளில் கிருஷ்ண, ருக்மிணியரின் ப்ரேம கலகத்தின் விவரம் இருக்கிறது.

368-378. நாரதர், ஸ்ரீகிருஷ்ணனின் தாம்பத்ய வாழ்க்கையை பார்க்க வந்த விவரம் இங்கு உள்ளது. ஒரு வீட்டில் ஸ்ரீகிருஷ்ணன், ஸ்ரீகந்தத்தை தடவிக்கொண்டு, மந்தார மாலையை அணிந்து கொண்டு சிரித்தவாறு நின்றிருந்தால், இன்னொரு வீட்டில், தன் மனைவியுடன் உத்தவனுடன் சேர்ந்து பகடை ஆடிக் கொண்டிருக்கிறான். இன்னொரு வீட்டில் நாரதர் வரும்போது, ஸ்ரீகிருஷ்ணன் அழுது கொண்டிருக்கும் தன் சிறு குழந்தைகளுடன் விளையாடிக் கொண்டிருக்கிறான். தொட்டில் ஆட்டிக் கொண்டிருக்கிறான். இன்னொரு இடத்தில் குழந்தைகளுக்கு அஸ்திர வித்யையை கற்றுக் கொடுத்துக் கொண்டிருக்கிறான். இன்னொரு வீட்டில், ஸ்ரீகிருஷ்ணன், ஸ்னான, தான, மௌன, மந்த்ர, தேவபூஜையில் நிரதனாக, ஒரே காலத்தில் அனைத்து மனைவியருடனும் ஜலக்ரீடையில் இருக்கிறான். இன்னொரு வீட்டில், மனைவிக்கு புராண வியாக்யானம் செய்து கொண்டிருக்கிறான். இன்னொரு இடத்தில் பிரம்மபோஜன செய்வித்தவாறு, தனது பிறவி சாபல்யம் அடைந்தது என்கிறான். இத்தகைய கிருஷ்ணனை, அவனது அபார மகிமையை நாரதர் துதிக்கிறார்.

379-382. பாண்டுவிற்கு ஸ்வர்க்கம் கிடைக்க வேண்டி, நாரதரின் குறிப்பிற்கேற்ப, ராஜசூய யாகம் செய்வதற்கு தர்மராஜன் புறப்பட்டது இந்த ஸ்லோகத்தில் உள்ளது.

390-394. ராஜசூயத்திற்காக கிருஷ்ணனின் அனுமதியைப் பெற்று, பாண்டவர்கள் தயார்

ஆனார்கள். இந்த சமயத்தில், ஜராசந்தனின் வதைக்கு கிருஷ்ணன், பீமார்ஜுனர்களை அனுப்ப முயல்கிறான்.

395-408. ஜராசந்தன் மகத தேசத்திற்கு புறப்பட்ட சந்தர்ப்பம். பீமனால் ஜராசந்தனை கிருஷ்ணன் கொல்ல வைத்தான்.

412-420. ராஜசூய யாகத்தின் அக்ரபூஜையின் கதை. சிசுபால வதையின் கதை இங்கு உள்ளது.

425-426. அந்து ஸ்வயம்வரதல்லி... : ஜாம்பவதியின் மகன் சாம்பன், துரியோதனனின் புத்ரி லக்ஷணையை அபகரித்து, கௌரவர்களால் கைது செய்யப்பட்டான். நாரதர் மூலமாக இந்த செய்தியைக் கேட்ட பலராமன், அவனை விடுவித்து வரும்போது, கௌரவர்களுடன் போர் நடந்தது. அப்போது கௌரவரகள் தோற்று, சரணடைந்தனர்.

427-428. இப்பரொந்தாகி கூடி மார்க்கதல்லி... பாரத போருக்குப் பிறகு, சுபத்திரையுடன் கிருஷ்ணன், த்வாரகைக்கு திரும்பி வந்தான். கிருஷ்ணனே அனைத்து நாசத்திற்கும் காரணம் என்று நினைத்து, அவனுக்கு சாபம் கொடுக்க தயார் ஆனபோது, ஸ்ரீகிருஷ்ணன் அவனுக்கு விஷ்வரூபத்தைக் காட்டி, அவன் விரும்பிய இடத்தில் நீர் கிடைக்கும் என்று வரம் அளித்தான். இந்திரன், ஸ்ரீகிருஷ்ணனின் ஆணைப்படி, தாகம் அடைந்த உதங்கனுக்கு நீர் கொடுப்பதற்கு, சண்டால வேஷத்தில் வந்தபோது, அவன் அதனை புறக்கணித்தான். அமிர்தம் பிறகு அமரர்களுக்கு வந்து சேர்ந்தது.

429. ருக்மவதிய கொட்டு ருக்மி ருக்மிணிய குமாரகெ... ருக்மிணியின் அண்ணன் ருக்மனின் மகள் ருக்மவதியை ஸ்வயம்வரத்தில் அபகரித்தான் என்று தங்கையின் மகன் பிரத்யும்னனுக்கு திருமணம் செய்து கொடுத்தான்.

430. மகன மகள மதுவெயொளகெ நீகிலதரனு... ருக்மியும் பலராமனும் ப்ரத்யும்னனின் திருமண சமயத்தில் சூதாட்டம்

ஆடியபோது, இருவரிலும் வாதம் வளர்ந்து பலராமன், ருக்மியைக் கொன்றான்.

434-435. கோதானத்தல்லி சகலதேஷவு தும்பிரலு. - ந்ருகராஜன் ஒரு முறை தானம் செய்த செல்வத்தை திரும்ப தானம் செய்ததால், முதலில் தானம் பெற்றவன் கோபத்தினால் அரசனை ஓணான் ஆகுமாறு சாபம் கொடுத்தான். யாதவ குமாரர் விளையாடும்போது, தாகம் ஏற்பட்டு, அந்த கிணற்றின் அருகில் வந்தபோது, அந்த ஓணானைப் பார்த்தனர். அவருக்கு அதனை தூக்க முடியாமல், கிருஷ்ணன் அதனை தூக்கினான். அவன் திவ்ய ரூபத்தை தரித்து, புறப்பட்டுச் சென்றான்.

436-456. குசேலனின் கதை வந்திருக்கிறது. குசேலன் கிருஷ்ணனுடன் படித்தவன். அவன் மிகவும் ஏழை. தன் ஏழ்மையை தாங்க முடியாமல், மனைவி கூறியதைப் போல, ஒரு கைப்பிடி அவலை எடுத்துக்கொண்டு, கிருஷ்ண தரிசனத்திற்கு வந்தான். கிருஷ்ணன் குசேலன் கொண்டு வந்த அவலைத் தின்று அவனுக்கு அதிக செல்வத்தை அளித்தான்.

457. சித்ரலேகெ பெரெதுகொட்டு... : பாணாசுரன் சிவனைக் குறித்து தவம் செய்து 1000 தோள்களைப் பெற்றான். பாணாசுரனின் மகள் உஷை, கனவில் அனிருத்தனை நினைத்தவாறு, விரகத்தில் தவிக்க, பாணாசுரனின் மந்திரி கும்பாண்டகனின் மகள் சித்ரலேகை, பல படங்களை வரைந்து உஷைக்கு காட்டி, கடைசியில் ஸ்ரீகிருஷ்ணனின் மகனான அனிருத்தனே இவளின் மனம் கவர்ந்தவன் என்று சொல்லி, தன் மாயா சக்தியினால் இவனை த்வாரகையிலிருந்து கொண்டு வந்து உஷைக்குக் கொடுத்தாள். பாணனால் சிறை வைக்கப்பட்ட தன் பேரன் அனிருத்தனின் விடுதலைக்காக கிருஷ்ணனே வந்து

பாணனின் நான்கு தோள்களைத் தவிர மற்ற அனைத்தையும் கத்தரித்தான்.

458-600. கிருஷ்ணனின் அஷ்வமேத யாகத்தின் விவரம் இருக்கிறது. கிருஷ்ணன் ஒரு முறை அஷ்வமேத யாகம் நடத்தினான். அப்போது வாயில் புல் கடித்தவாறு வந்த பிராமணன், ஷ்ருததேவ. அர்ஜுனன் தன் சாமர்த்தியத்தைப் பற்றிய நம்பிக்கையில், அவனின் குழந்தைகளுக்கு சாவு வராதவாறு, அம்பராத்தூணியை நியமித்தான். ஆனால், அந்தக் குழந்தை, அதனுடனேயே மறைந்துவிட, தன் சபதத்தின்படி அர்ஜுனன் அக்னி பிரவேசம் செய்யத் தயாரானான். கிருஷ்ணன் அனைவரையும் ரதத்தில் ஏற்றிக்கொண்டு, அனந்தாஸனத்திற்கு சென்று, அங்கிருந்த பிராமணனின் குமாரர்களை காண்பித்தான். அதன் பிறகு, சபதத்திற்குக் கட்டுப்பட்ட தான், ஸீமா உல்லங்கனம் செய்ததால், பிராயச்சித்தம் செய்து கொண்டான். கிருஷ்ண ருக்மிணியர், தான தர்மம் செய்து கொண்டிருக்க, தேவகி, தன் மக்களுக்கும் சத்கதி கொடுக்குமாறு கேட்டுக் கொண்டாள்.

506-509. இது உடுப்பி கிருஷ்ணனின் மூர்த்தியின் மூல கதை. தாய் தேவகி கிருஷ்ணனின் பால லீலையை பார்க்க விரும்பியபோது, அவன் இடுப்பில் துணி சுற்றிக்கொண்டு விளையாடிய நிலையை கேள்விப்பட்ட ருக்மிணிக்கு வியப்பு உண்டாயிற்று. தனக்கு அத்தகைய பிரதிமையை செய்து கொண்டாள். அதுவே மத்வரின் காலத்தில் உடுப்பியில் பிரதிஷ்டாபனை ஆயிற்று என்று சொல்கிறோம்.

**வாதிராஜ குரூன் வந்தே**
**ஹயக்ரீவ பதாஸ்ரயான்.**

****